மாணிக்கவாசகர் அருளிய

# திருவெம்பாவை


MUNICIPAL HIGH SCHOOL.
KUMBAKONAM.
LIBRARY.
Gen. No. 12,363.
Sub No. H.T. 3165.

விளக்கவுரையாளர்

பேராசிரியர் **அ. சீநிவாசராகவன்**

தூத்துக்குடி




கோயமுத்தூர் - 1.

இரண்டாம் பதிப்பு : 1970

விலை 75 காசுகள்

புரோகிரஸிவ் பிரஸ்
சென்னை-1.

## முன்னுரை

மார்கழி மாசம் வருகிறது. பனியும், குளிரும், நோயும் மலிந்த மாசம். வாழ்க்கை என்ற மார்கழியிலும், அறியாமை யாலான பனி கண்ணை மறைக்கிறது ; சாவு என்ற வாடைக் காற்றில், உள்ளம் பயக்குளிரில் நடுங்குகிறது ; உயிரோ, ஆசை, ஏமாற்றம், தீமை, பொறுமை முதலிய எத்தனையோ நோய்களில் அழுந்தி வேதனை உறுகிறது. 'மாசங்களுக்குள் மார்கழி மாதத்தில் நான் இருக்கிறேன்' என்று பகவான் ஏன் கீதையில் கூறினான்? ஆற்றமுடியாது, அல்லற்படும்போது தான் உயிர் தன்னை நோக்கி, தலைவனை நோக்கித் திரும்பும் என்ற கருத்தாலோ? அப்படித் திரும்பி, இறைவனைக் கண்ட இரண்டு உள்ளங்கள் முறையே 'திருப்பாவை'யிலும், 'திருவெம்பாவை'யிலும் பேசுகின்றன. பேச்சைக் கேட்டால், புரிந்துகொண்டால், நம்முடைய மார்கழி, தையாக மாறும். ஆனால் கேட்பதற்கு நேரமில்லை, புரிந்துகொள்ளப் பொறுமை இல்லை. அப்படிப்பட்டவர்களுக்கு—அதாவது, என் போன்றவர்களுக்கு—துணையாக இருக்கட்டும் என்று கருதி, இவ்வுரை எழுதப்பெற்றது. 'திருப்பாவை'க்கு அற்புதமான பழைய உரைகள் பல உள்ளன ; 'திருவெம்பாவை'க்கோ இக்காலத்தில் எத்தனையோ பெரும் புலவர்கள், அருமையான விளக்க உரைகள் சொல்லி வருகிறார்கள். அவற்றிலே உள்ள விரிவையும், நுட்பத்தையும், புலமைத் திறனையும், தத்துவப் பாங்கையும் இங்கே இந்த உரையில் காண

முடியாது. பாவைப் பாடல்களிலே உள்ள ஆழ்ந்த உணர்ச்சியை, போகிற போக்கிலே சிறிது பெற விரும்பும் என் போன்ருருக்கு மட்டும் இவ்வுரை பயன்படலாம் என்று எண்ணுகிறேன். இவ்வுரையைச் சில ஆண்டுகளுக்குமுன் வானொலி நிலையத்தார் ஒலிபரப்பினர்கள். அவர்கள் அனுமதியை முன்னிட்டு திருவெம்பாவை உரை வெளியாகிறது.

மறுபடியும் சொல்லிக் கொள்ளுகிறேன்: இவ்வுரை ஒரு சிறுபடி, ஆண்டாள், மாணிக்கவாசகர் இவர்களுடைய அலகிலாப் பக்தி உணர்ச்சியை நோக்கி மனத்தைத் திருப்பும் முயற்சியில் முதற்படி. மற்றைய படிகளிலும் நாம் நடந்து உய்ய, திருமாலும், சிவபெருமானும் அருள்பாலிக்க வேண்டும். இதுவே என்னுடைய பிரார்த்தனை.

அ. சீநிவாசராகவன்

உ

# திருவெம்பாவை விளக்கம்

—: o :—

## ஆதியும் அந்தமும்

வைகறைப் பொழுதில், நோன்பு நோற்கும் கன்னிப் பெண்கள், தெருவிலே சிவபெருமானைப் பாடிக்கொண்டு செல்கிருர்கள். அங்கங்கே நின்று வீட்டினுள் உறங்கும் தம் தோழிமாரைத் துயிலெழுப்புகிருர்கள். இந்தக் காட்சியில் தொடங்குகிறது மாணிக்க வாசகப் பெருமான் அருளிய திருவெம்பாவை.

வீட்டுக்குள் உறங்கும் பெண்ணை, 'வாள் தடங்கண் மாதே, ஒளிபொருந்திய நீண்ட கண்களை உடைய பெண்ணே' என்று வெளியிலே உள்ள பெண்கள் அழைக்கிருர்கள். "ஆதியும் அந்தமும் இல்லாதவன் சிவபெருமான்; அவன் காண்டற்கரியவன்; அரும் பெரும் சோதி. என்ருலும் உன் விழியும் நீண்டது; பக்தி என்ற ஒளி படைத்தது. உன்னுல் இறைவன் என்ற சோதியைக் காணமுடியும். ஆனுல், நீயோ கண்ணை மூடிக்கொண்டு தூங்குகிருய். நாங்கள் இறைவனைப் பாடி வருவது காதில் விழவில்லையா? உன் காது என்ன, ஒன்றும் கேளாத இரும்புக் காதா? தேவ தேவனுன மகாதேவனை, கழல் அணிந்த அவனுடைய

திருவடிகளை, நாங்கள் வாழ்த்துகின்ற ஒலி வீதியெல்லாம் நிரம்பியது. இதைக் கேட்டாள் ஒருத்தி. பக்தி மேலீட்டால் விம்மி விம்மி மெய் மறந்தாள்; மலர்ப் படுக்கையிலிருந்து புரண்டு விழுந்தாள்; ஒன்றுக்கும் ஆகாதவள் போல் தன் நினைவற்றுக் கிடக்கிருள். இவள் அல்லவா இறைவனிடத்தில் அன்புடையவள்! எங்கள் தோழியாகிய நீயோ, தன்னைக் காண்பதற்கு ஒளி பொருந்திய கண்ணை உனக்கு இறைவன் அளித்திருந்தும், கண் திறவாமல் உறங்கிக் கிடக்கிருய். இது முறையா?'' இப்படியாக ஒரு தோழியைத் துயிலுணர்த்துகிருர்கள் பாவை நோன்பு என்ற பாவனையில் சிவபெருமானைப் பாடிப் பரவும் பெண்கள். கண்ணிருந்தும் காண முற்படாத உயிர்களை, இரக்கத்தோடு இங்கே தட்டி எழுப்புகிருர் மாணிக்க வாசகப் பெருமான்.

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும், வாள்தடங்கண்
மாதே! வளருதியோ? வன்செவியோ நின்செவிதான்?
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே, விம்மிவிம்மி, மெய்மறந்து,
போதார் அமளியின்மேல் நின்றும்புரண்டு, இங்ஙன்
ஏதேனு மாகாள், கிடந்தாள்; என்னே! என்னே!
ஈதே எந்தோழி பரிசேலோர் எம்பாவாய். (1)

---

## பாசம் பரஞ்சோதிக்கு

உறங்கும் ஒருத்தியை, வெளியிலிருந்து எழுப்புகிருர்கள் அவளுடைய தோழிமார். 'நேரிழையாய், சிறந்த ஆபரணங்களை அணிந்தவளே' என்று கனிவோடு அழைக்கிருர்கள். ஆம். நேரிழைதான்



சிவபெருமானிடம் அன்பு வைத்தவள் என்பதற்கு அடையாளமான அணிகளையே அவள் பூண்டிருக்கிருள். அவள் பேச்சும் அப்படித்தான். கடந்து நிற்கின்ற ஒளி, பரஞ்சோதி. அவன் ஒருவனுக்கே தன் அன்பு என்பாள். இரவு பகல் எப்போதும் பேசும் போதெல்லாம் இதையே சொல்வாள். ஆனல், இப்போதோ, உறங்குகிருள்; மலர்ப்படுக்கையில் நேசம் உடையவள் போல, அதிலிருந்து நீங்காமல் உறங்குகிருள். இவள் இறைவனிடத்தில் உள்ளதாகச் சொன்ன பாசம், எப்போது போதார் அமளிக்கு, அது குறிக்கும் உலக இன்பத்திற்குத் திரும்பியதோ? 'எப்போதடி, சொல்' என்று பரிகாசமாக வெளியிலிருந்து குரல் கொடுக்கும் தோழிமாரைப் பார்த்து, உறக்கம் இன்னும் முழுவதும் நீங்காத பெண் சொல்கிருள்: 'நான் மாத்திரந்தான் நேரிழையா? சிவ பக்திச் சின்னம் அணிந்தவளா? நீங்களும் நேரிழையீர்தாம். அப்படியானல், இப்படி வாய்க்கு வந்தபடி பேசி விளையாடுவது சிவபக்தர்களாகிய உங்களுக்குப் பொருந்துமா? சிவபெருமானை வழிபடப் புறப்பட்ட நீங்கள் இடம், பொழுது இவற்றை எண்ணுமல் விளையாடலாமா?' இதை ஏற்றுக்கொண்டவர்கள் போல, வெளியில் நிற்கும் பெண்கள் 'தேவர்களும் வழிபடுவதற்கு அருமையானவை இறைவனுடைய திருவடி மலர்கள். காணற்கரிய அத்திருவடிகளை நமக்குக் காணும்படி தந்து அருள் செய்கிருன் சிவலோகநாதன். காணும்படி ஞான ஒளி நல்கி, தில்லைச் சிற்றம்பலத்தில் ஆடுகிருன். அவனுடைய அடிமைகளே நாம். நீ சொல்வது உண்மைதான். வா, அதன்படி நடப்போம்' என்று உறுதி கொள்கிருர்கள்.

பாசம் பரஞ்சோதிக் கென்பாய் இராப்பகல் நாம்
பேசும்போ தெப்போதிப் போதார் அமளிக்கே
நேசமும் வைத்தனையோ? நேரிழையாய்! நேரிழையீர்.
சீசீ! இவையுஞ் சிலவோ? விளையாடி
ஏசு மிடமீதோ? விண்ணோர்க ளேத்துதற்குக்
கூசு மலர்ப்பாதந் தந்தருள வந்தருளும்
தேசன், சிவலோகன், தில்லைச்சிற் றம்பலத்துள்
ஈசனார்க் கன்பார்யாம் ஆரேலோர் எம்பாவாய். (2)

## முத்தன்ன வெண்ணகையாய்

"முத்துப் போன்ற வெண்மையான பற்களை உடையவளே, உலக இன்பங்களில் மயங்காத உன் தூய்மை, உன் முத்தன்ன வெண்ணகையில் தோன்றுகிறது. முன்பெல்லாம், எங்கள் முன் வந்து 'தந்தையே, என் ஆனந்த நிலையமே, அமுதமே' என்று இறைவன் புகழைத் தித்திக்கத் தித்திக்கப் பேசுவாய். உண்மையென்று தான் நினைத்தோம். ஆனால் இப்போது சிவன் புகழ் பாடி உன் வாசலில் நிற்கிறோம். நீ கதவைத் திறந்தபாடில்லை, வா, கதவைத் திற" என்று வெளியிலிருந்து பெண்கள் அழைக்கிறார்கள். உள்ளேயிருப்பவள் சிறிது கசப்போடு பேசுகிறாள்: 'தெரியுமடி, தெரியும். நீங்களே இறைவனிடத்தில் பற்றுடையவர்கள்; ஆண்டவனுடைய பழைய தொண்டர்கள்; அவனிடம் உரிமை கொண்டாடும் பாங்கு உடையவர்கள்; நான் புதிதாக வந்த அடிமை. என்னத்தைக் கண்டேன்? என்னைப் போன்றவர்கள் சிறுமையை உங்கள் பெருமையால் விலக்கி எங்களை ஆட்கொள்ளக் கூடாதா? அப்படிச் செய்வது உங்கள் பக்திக்குக்



கெடுதியோ? பிறர் மேல் குற்றம் கூறுவதுதான் இறைவனுக்குச் செய்யும் கடமையோ?"

'இல்லையடி அம்மா, இல்லை. ஏதோ நீ வரவேண்டும்; எங்களோடு கலந்து அவன் புகழ் பாடவேண்டும் என்ற ஆசையில் சொன்ன வார்த்தை. அதை மனத்தில் வைக்காதே. உன் அன்பு எங்களுக்குத் தெரியாதா? அந்த அன்பினால் உன் சித்தம் அழகு பெற்றுள்ளது என்பதுவும் நாங்கள் அறிந்ததுதானே! உன்போல் அழகிய சித்தமுடையவர்கள் சிவனைப் பாடுவார்கள். அதையே உன்னிடம் வேண்டுகிறோம்' என்று வெளியில் உள்ள மாதர் அன்போடு தம் தோழியை எழுப்புவதாகப் பாடுகிறார் மாணிக்கவாசகர்.

முத்தன்ன வெண்ணகையாய்! முன்வந் தெதிரெழுந்தென்
அத்தன், ஆனந்தன், அமுதனென் றள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய்; வந்துன் கடைதிறவாய்.
பத்துடையீர்! ஈசன் பழஅடியீர்! பாங்குடையீர்!
புத்தடியோம் புன்மை தீர்த்தாட் கொண்டாற்பொல்லாதோ?
எத்தோநின் அன்புடைமை? எல்லோ மறியோமோ?
சித்தம் அழகியார் பாடாரோ நம்சிவனை?
இத்தனையும் வேண்டும் எமக்கேலோர் எம்பாவாய். (3)

## ஒண்ணித்தில நகையாய்

'ஒளி முத்துப் போன்ற பல்லினை உடையவளே, இன்னும் உனக்குப் பொழுது விடியவில்லையா?' என்று நோன்பு நோற்கும் மாதர்கள் உள்ளே உறங்கும் ஒருத்தியைப் பார்த்து அங்கலாய்க்கிறார்கள். விடியற்காலத்தில்தான் நோன்பு நோற்பது என்பது மரபு. ஆனால்,

நோன்பு நோற்கத் தொடங்கியபொழுதே, இவர்களுக்குப் பொழுது புலரத் தலைப்பட்டது. அறியாமை இருள் விலகி, இறைவனுடைய அருள்ஒளி நம்மை அடைவதுதானே உண்மையான விடியற்காலம்? 'இஃது உனக்கு இன்னும் வரவில்லையா?' என்று கனிவோடு கேட்கிறார்கள். இந்தக் கனிவு உறங்கிக் கிடந்தவளையும் ஆட்கொண்டது. 'என்னிடத்திலே எவ்வளவு பரிவு இவர்களுக்கு? இவர்களையும், இவர்கள் போன்ற மெய்யன்பர்களையுமல்லவா கிளிபோல் இனிமையாகப் பேசுவோர் என்று சொல்லவேண்டும்? இப்படி மதுரமாகப் பேசும் அன்புள்ளங்கள் அனைத்தோடும் உறவு கொள்ள வேண்டாமா? ஆனால், வண்ணக்கிளி மொழியாராகப் பக்குவமடைந்த எல்லோரும் வந்து விட்டார்களா?' என்று கேட்கிறாள் அவள். வெளியே உள்ளவர்கள் சொல்கிறார்கள்: 'அடியவர் கூட்டத்தை எண்ணிக் கணக்கிட முடியுமா? ஏதோ செய்து பார்த்துச் சொல்லுகிறோம். ஆனால், நேரமாகும். அதற்குள் மறுபடியும் தூங்கிவிடாதே, காலத்தை வீணாகக் கழித்து விடாதே. வா, தேவர்களுக்கு அமுதமாக விளங்கும் ஒப்பற்றவனை, வேதம் உரைக்கின்ற மேலான மெய்ப்பொருளை, அப்படி உயர்வு அற உயர்ந்திருந்தும் நம்முடைய கண்ணின் முன் இனியவனாகக் காட்சிதரும் அருளாளனை உள்ளம் உருகப் பாடுவோம். இறைவனை நோக்கிச் செல்பவர் கணக்கை நாங்கள் அறிய முடியாது. உயிர்கள் யாவும் அவனுடைய அளித்தல் திறத்தாலே முடிவில் அவனை நோக்கித்தானே செல்கின்றன? இங்குள்ளவரை மட்டும் அடியவராக எப்படிக் கருதுவது? வா, நீயே வந்து எண்ணமுடியாத இக்கூட்டத்தை எண்ணிப் பார். எண்ணிக்கை குறைந்



தால், பிறகு......பிறகு வேண்டுமானால் தூங்கலாம்' என்று பேசும் பெண்களின் சொற்களில் மாணிக்கவாசகருடைய அடக்கமும் தத்துவ நிறைவும் பேசுகின்றன.

ஒள்நித் திலநகையாய்! இன்னம் புலர்ந்தின்றோ?
வண்ணக் கிளிமொழியார் எல்லாரும் வந்தாரோ?
எண்ணிக்கொ டுள்ளவா சொல்லுகோம்; அவ்வளவும்
கண்ணைத் துயின்றவமே காலத்தைப் போக்காதே.
விண்ணுக் கொருமருந்தை, வேத விழுப்பொருளை,
கண்ணுக் கினியானைப் பாடிக்க சிந்துள்ளம்
உள்நெக்கு நின்றுருக யாமாட்டோம்; நீயேவந்
தெண்ணிக் குறையில் துயிலேலோர் எம்பாவாய். (4)

---

## மால் அறியா நான்முகனும் காணா...

'திருமால், அயன் முதலிய தேவர்களும் காண முடியாத அகண்டாகாரப் பெருவடிவினன் சிவபெருமான். ஓ, இப்பெருமானை, நாம் நம்முடைய சிற்றறிவினால் வேறு துணை இல்லாமல் கண்டறிந்துவிட முடியும் என்று பிறர் நம்பும்படியாக நீ பேசினாய். பாலுந் தேனும் கலந்தது போலத்தான் இருந்தது உன் இதழிலிருந்து உதிர்ந்த சொல். ஆனால், இப்படியெல்லாம் பேசிய நீ, கதவடைத்துக்கொண்டு தூங்குகிறாய்; போகட்டும்; கதவையாவது திற. எங்களுக்கு எங்கள் அறிவிலே அவ்வளவு நம்பிக்கை இல்லை. இவ்வுலகமும், வானுலகமும் அறிய முடியாத பெருமை வடிவமே அவனுடைய கோல வடிவம். இருந்தாலும், அவனுடைய சீலம், எளிவந்த தன்மை, நம்மையும் ஆட்கொண்டு நம்மை உய்விக்கிறது; சீராட்டுகிறது.

இதையே நாங்கள் உணர்கிறோம். அடைவதற்கான பொருள் அவனே. அடைவதற்கான வழியும் அவனே என்று உணர்ந்து, சிவபெருமானே, சிவபெருமானே என்று உரக்கப் பாடி நாங்கள் அவனைச் சரணடைகிறோம். இந்த ஒலி உன் காதில் விழவில்லையா ? அது குறிக்கும் உண்மை, நீ பெரிதாகப் பேசிய உன் அறிவுக்குத் தெரியவில்லையா ? இத்தனைக்கும் நீ ஏலக் குழலி ஆயிற்றே! இறைவனுடைய அருள் மணம் உன் தலையில் படிந்து உன் கூந்தலில் ஏறி இருக்கிறதே! உனக்குமா தெரியவில்லை ? நீயுமா, உறங்குகிறாய் ? என்று ஒருத்தியை மற்றவர் துயிலுணர்த்துகிறார்கள்.

மாலறியா நான்முகனுங் காணா மலையினை நாம்
போலறிவோம் என்றுள்ள பொக்கங்களே பேசும்
பாலூறு தேன்வாய்ப் படிறீ! கடைதிறவாய்.
ஞாலமே விண்ணே பிறவே அறிவரியான்
கோலமும், நம்மை ஆட்கொண்டருளிக் கோதாட்டும்
சீலமும் பாடிச் சிவனே சிவனேயென்று
ஓலமிடினு முணராய், உணராய்காண்!
ஏலக்குழலி பரிசேலோர் எம்பாவாய். (5)

---

## மானே நீ நென்னலை

'மான் போன்றவளே, நேற்று என்ன சொன்னாய் எங்களிடம் ? நீயே வந்து எங்களை எழுப்புவதாகச் சொல்லவில்லையா ? இன்று நாங்கள் வந்து உன்னை எழுப்பியும் உறங்கிக் கொண்டிருக்கிறாய். நாணமில்லையா உனக்கு ? எங்கேயடி, எந்தத் திசையில் காற்று வாக்கில் போயிற்று நீ பேசிய பேச்சு ? உனக்கு



மட்டும் இன்னும் பொழுது விடியவில்லை போலிருக்கிறது. போனது போகட்டும். வானுலகமும் மண்ணுலகமும் மற்று எல்லா உலகங்களும் அறிய முடியாதபடிக்கு அனைத்தையும் கடந்து நிற்கின்ற சிவபெருமான், தானாகவே தன்னுடைய கருணையே காரணமாக, எங்களிடம் எழுந்தருளினான். எங்களுக்கு அருள் பாலித்தான். எங்களை ஆட்கொண்டான். அவனுடைய பெருமை மிகுந்த கழலடிகளை வாயாரப் பாடி வந்திருக்கிறோம். நீயோ வாய் திறந்து ஒரு வார்த்தை கூடப் பேசாமல் ஏனோ தானோ என்று தூங்குகிறாய். எங்களோடு சேர்ந்து அவன் புகழைப் பாடி உருகாமல் இருக்கிறாய். உனக்குத் தானடி அம்மா, இது நன்றாய் இருக்கிறது. ஆனாலும் எங்களுக்கு மட்டுமா சிவபெருமான் தலைவன் ? உனக்கும், எல்லோர்க்கும் அவன் தானே தலைவன் ? இதை உணர்ந்து, இனியாவது எழுந்துவந்து அவனைப் பாடு' என்று தூங்கும் ஒருத்தியை, அவள் வீட்டுக்கு வெளியிலே நின்று, இறைவனிடத்தில் அன்பு செலுத்தும் அவள் தோழிமார் எழுப்புவதாக அமைந்துள்ளது இப்பாடல்.

மானே! நீநென்னலை நாளை வந்துங்களை
நானே யெழுப்புவன் என்றலும், நாணாமே
போன திசைபகராய்; இன்னம் புலர்ந்தின்றோ ?
வானே நிலனே பிறவே அறிவரியான்
தானே வந்தெம்மைத் தலையளித்தாட் கொண்டருளும்
வானவார் கழல்பாடி வந்தோர்க்குன் வாய்திறவாய்;
ஊனே உருகாய்; உனக்கே உறும் எமக்கும்
ஏனோர்க்குந் தங்கோனைப் பாடேலோர் எம்பாவாய். (6)

---

## அன்னே இவையும் சிலவோ

விடியற்காலை வேளையில் சிவபெருமானை வழிபட மறந்து தூங்கும் மற்ருெருத்தி. அவளை எழுப்ப முற்படும் அவளுடைய தோழியர் பேசுகிருர்கள்: "தாயே, உன் விளையாடல்களில் இதுவும் ஒன்ரு? தேவர்களாலும் எண்ணி உணர்வதற்கு அரியவன்; ஒப்பற்றவன்; பெரும்புகழ் படைத்த முழுமுதல். அந்தப் பெருமானுடைய அடையாளமான இசைக்கருவிகள் ஒலித்தால் "சிவன் சிவன்" என்று பரவசத்தில் வாய் திறந்து கூவுவாய்.

தென்னவனே என்று யாராவது சொன்னல் போதும், உடனே அனலில் இட்ட மெழுகுபோல் உருகுவாய். இப்போதோ? இதோ நாங்கள் தனித் தனியே அவனைப் பாடுகிருேம். எங்கள் தலைவன், எங்கள் அரசன், எங்கள் உயிருக்கு அமுதானவன் என்றெல்லாம் அவனைப் புகழ்கிருேம். எங்கள் பேச்சு காதில் விழுந்தும் தூங்குகிருயே.

அன்போ, அறிவோ அற்ற இரும்பு மனத்தை உடையவள் போல ஒன்றும் பேசாமல், அசையாமல் சும்மா கிடக்கிருயே? தூக்கம் அவ்வளவு சொகுசானதா?"

இப்படிப் பேசுகிருர்கள், உறங்கும் தம் தோழியை இறைவனிடத்தில் அன்பு செலுத்த அழைக்கும் அன்புடையார். இவர்கள் பேச்சின் மூலமாக ஏதோ சிறிது பக்தி செய்யத் தலைப்பட்டும், உலகியலிலே அழுந்தித் தம்மை மறந்து தூங்கும் உயிர்களைத் துயிலெழுப்புகிருர் மணிவாசகப் பெருந்தகை.



அன்னே, இவையுஞ் சிலவோ? பலவமரர்
உன்னற் கரியா னெருவன் இருஞ்சீரான்
சின்னங்கள் கேட்பச் சிவனென்றே வாய்திறப்பாய்;
தென்னு என்னுமுன்னந் தீசேர் மெழுகொப்பாய்;
என்னுனை என்னரையன் இன்னமுதென் றெல்லோமும்
சொன்னேங்கேள், வெவ்வேருய்; இன்னந் துயிலுதியோ?
வன்னெஞ்சப் பேதையர்போல் வாளா கிடத்தியால்;
என்னே துயிலின் பரிசேலோர் எம்பாவாய். (7)

---

## கோழிச் சிலம்பச் சிலம்பும்

"கோழி கூவியது. பறவைகள் கல்கலவென்று சிலம்போசைபோல் ஓசை எழுப்புகின்றன. கோயிலில் திருப்பள்ளி யெழுச்சி நடைபெறுகிறது என்பதை உணர்த்தும் வெண்மையான சங்கின் ஒலி எங்கும் ஒலிக்கிறது. இதைக் கேட்டாவது அவனை நினைக்க வேண்டாமோ? தனக்குவமை இல்லாத பரஞ்சோதி சிவபெருமான். அவன் கருணையோ ஒப்பற்றது; உவமையெல்லாம் கடந்து நிற்பது. அவனுடைய பெருமையை நாங்கள் பாடுகிருேமே, நீ கேட்க வில்லையா? அம்மா, நீ நன்ருய் இருப்பாய், என்ன தூக்கம், என்ன தூக்கமடி இது? இதுவா வாழும் வழி?

கொஞ்சம் வாயைத் திறந்துதான் பேசேன். நம்முடைய அரசனுகிய சிவபெருமானிடம், இப்படி உறக்கத்தின் மூலமாகத்தான் அன்பு காட்டுவதோ? அளப்பரிய காலப்பெருவெள்ளத்தின் முதலாய், அதன் தலைவனுய், அதன் எல்லையாய், அதைக் கடந்த பொருளாய் உள்ள ஒருவன், நிகரிலாத மேன்மை

உடையவன், உமையொரு பாகன், ஏழை பங்கிலே நின்று காக்கும் அருளாளன், அவனைப் பாடுவோம் வா'' என்று, தூங்கும் தம் தோழியை நோன்பு நோற்கப் புறப்பட்டுள்ள பெண்கள் துயிலெழுப்புவதாக அமைந் துள்ளது இந்தப் பாடல்.

கோழி சிலம்பச் சிலம்புங் குருகெங்கும் ;
ஏழி லியம்ப இயம்புவெண் சங்கெங்கும் ;
கேழில் பரஞ்சோதி கேழில் பரங்கருணை
கேழில் விழுப்பொருள்கள் பாடினேம் ; கேட்டிலையோ ?
வாழியீ தென்ன வுறக்கமோ ? வாய்திறவாய் !
ஆழியான் அன்புடைமை ஆமாறும் இவ்வாறோ ?
ஊழி முதல்வனாய் நின்ற ஒருவனை
ஏழை பங்காளனையே பாடேலோர் எம்பாவாய். (8)

---

## முன்னைப் பழம் பொருட்கும்

உறங்கிய தமது தோழிமாரை எழுப்பி, தம்மோடு சேர்த்துக்கொண்டு, நோன்பை முன்னிட்டு ஒன்றாக நீராடப் போகிறார்கள் கன்னிப் பெண்டிர். போகும் வழியில் சிவபெருமானைத் துதிக்கிறார்கள். தம்முடைய நோன்பு எதற்காக என்பதையும் அறுதியிட்டுச் சொல் கிறார்கள். "இறைவனே, நீ பழமைக்கெல்லாம் பழமை யான மூலப்பொருள். அதே முறையில் புதுமைக் கெல்லாம் புதுமையாக நின்று அவற்றிற்கு உயிர் தரும் தன்மையனும் நீயே. இப்படி வையத்தின் மலர்ச்சிக்குக் காரணமாகவும் அதன் நவ நவமாம் வண்ணமாகவும் உள்ள நீ எல்லாப் பொருளுக்கும், எல்லா உயிர்க்கும் தலைவன். எங்களை ஆட்கொண்ட ஆண்டவன். உன் அடிமைகளாக இருக்கும் பெருமையைப் பெற்ற நாங்கள்,



உன்னிடத்தில் மாறாத அன்பு செலுத்தும் தொண்டர் களின் திருவடிகளை வணங்குவோம். அவர்களுக்கே உரியவர்களாக நிற்போம். அவர்களையே எமது கண வராகக் கொள்வோம். அவர்கள் சொன்னபடிக்கு, அவர்களுக்கு அடிமையராய் நின்று குற்றேவல் செய்வோம். இதுவே நாங்கள் விரும்புவது. எம்பெரு மானே, இந்த விருப்பம் நிறைவேற, நீ அருள்பாலிக்க வேண்டும். இது மாத்திரம் எங்களுக்குக் கிடைத்து விட்டது என்றால், பிறகு, எங்களுக்குத் தேவை எதுவும் இல்லை ; குறை எதுவும் இல்லை.''

இப்படியாகத் தாம் நோன்பு நோற்கும் கார ணத்தைப் பேசிப் போகிறார்கள் கன்னிப் பெண்கள். நோன்பெல்லாம் காலங் கடந்த மெய்ப்பொருளாகிய இறைவனை உணர்வதற்கும், உணர்ந்த மெய்யடி யாரோடு கூடிநிற்பதற்குமே. இவற்றைவிட இன்பம் வேறு இல்லை என்பதே இப்பாடலில் மாணிக்கவாசகர் அருமையாகக் குறிப்பிடுவது.

முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே !
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே !
உன்னைப் பிரானாகப் பெற்றவுன் சீரடியோம்
உன்னடியார் தாள்பணிவோம் ;
ஆங்கவர்க்கே பாங்காவோம் ;
அன்னவரே எங்கணவ ராவார் ; அவருகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம் ;
இன்ன வகையே எமக்கெங்கோன் நல்குதியேல்,
என்ன குறையுமிலோ மேலோர் எம்பாவாய். (9)

---

## பாதாளம் ஏழினும் கீழ் சொல்

நீராடப் போகும் வழியிலே சிவபெருமானுடைய பெருமையை வாயாரப் பாடி மனத்தினால் சிந்தித்துச் செல்லும் கன்னிப் பெண்கள் பேருண்மை ஒன்றை உணர்கிறார்கள். சத்தியப் பொருளாகிய இறைவனை உணரவேண்டும் என்று உறுதியோடு முற்பட்டு, அவனை நோக்கி அன்புப் பாதையில் நடந்தவர்களுக்கே இந்த உண்மை துலங்கும். அவன் எல்லை கடந்தவன் என்பதே இவ்வுண்மை. வானமும் வையமும் கடந்து நிற்கும் அவனுடைய திருவடியைத் தேடிச் செல்கிறோம். பாதாள உலகம் ஒன்றா, இரண்டா, ஏழு என்று சொல்கிறார்கள். இவ்வுலகங்களையெல்லாம் கடந்து நிற்கிறது. அதாவது நம்முடைய அளவிற்கு அப்பால் நிற்கிறது அவனுடைய திருவடி மலர். இதுபோலவே அவன் திருமுடியும். மலர்கள் நிறைந்து பொருந்தும் அவன் எழில் முடியும், எல்லாப் பொருள்களின் முடிவாக உள்ளது. அடியும், முடியும் இவ்வாறென்றால் அவன் திருமேனியோ ஒருபுறம் பெண் வடிவம் பெற்று, இன்ன தன்மையன் என்றுணர இயலாதவகையில் இருக்கிறது. அவனைப் பற்றிப் பேசத் தலைப்படும் வேதம், அவனையே முதல்வன் என்று கூறும். அவனோ, வேத முதலாக அதையும் கடந்து நிற்கிறான். விண்ணுலகும், மண்ணுலகும் ஒன்றுசேர்ந்து அவனைத் துதித்தாலும், அவன் பெருமை ஓத முடியாத அளவுக்கு விரிந்துகொண்டே செல்கிறது. இவ்வளவு இருந்தும், உயிர்களுக்குத் துணைவனாக நிற்கும் கருணை உடையவன். தொண்டர் உள்ளமே கோயிலாய்க் கொண்டவன். இப்படிப் பேசி வரும்போதே, இறைவனுடைய அலகிலாத் தன்மை, கருத்தாக அன்று, அனுபவமாக மலரத் தொடங்குகிறது.



உடனே பேசும் பெண்களுக்கு ஒரு மலைப்பு. பக்கத்தில் உள்ளவரைப் பார்த்து, 'நீங்கள் குற்றமற்றவர்கள்; இறைவன் கோயிலில் அவனுக்குக் கவரி வீசும் பிணாப் பிள்ளைகள். எப்போதும் அவனோடிருக்கிறீர்கள். நீங்களாவது சொல்லுங்களேன். அவன் ஊர் எது? பேர் எது? உற்றார் யார்? அயலார் யார்? எப்படி அவனைப் பாடித் துதிப்பது?' என்று பதற்றத்தோடு பேசும் குரலில் இறை அனுபவம் பேசுகிறது.

பாதாளம் ஏழினுங்கீழ்ச் சொற்கழிவு பாதமலர்;
போதார் புனைமுடியும் எல்லாப் பொருள்முடிவே;
பேதை ஒருபால்; திருமேனி ஒன்றல்லன்;
வேதமுதல்; விண்ணோரு மண்ணுந் துதித்தாலும்,
ஓதஉலவா ஒருதோழன்; தொண் டருளன்;
கோதில் குலத்தரன்றன் கோயிற் பிணாப்பிள்ளைகாள்!
ஏதவனூர்? ஏதவன்பேர்? ஆருற்றார்? ஆரயலார்?
ஏதவனைப் பாடும் பரிசேலோர் எம்பாவாய். (10)

---

## மொய் ஆர் தடம் பொய்கை

நோன்பு நோற்கும் கன்னிப் பெண்கள் நீராடும் பொய்கைக் கரையை அடைகிறார்கள். பொய்கையில் புகுந்து "முகேர்" என்ற சத்தம் எழும்படி, தண்ணீரைக் கையால் அளைந்து இறைத்து முழுகுகிறார்கள். 'என்ன குளிர்ச்சி......என்ன குளிர்ச்சி......இறைவனுடைய இணையடி நிழலைப்போல் அல்லவா இருக்கிறது' என்று நினைக்கிறார்கள். உடனே அவனுடைய திருவடியைப் பாடுகிறார்கள். "அவனுடைய அடிமையாய் வழிவழி வந்த அடிமையாய் இருப்பதுதானே

பெருவாழ்வு. இதைப் பெற்று உள்ளங் குளிர்ந் தோம்" என்று மகிழ்கிருர்கள். இத்தனைக்கும் நீறு பூசிய நெருப்புப் போல் இருக்கிருன் இறைவன். திருநீற்றில் முழுகிய மேனி. உள்ளே சிவந்த தழல் போன்ற வண்ணம். ஆனுல், மெல்லிய இடையும் மைவிழியும் உடைய உமாதேவி என்ற பச்சைப்பசுங் கொடி இந்தத் தழல்மேல் படர்ந்திருக்கிறது. அருள் வடிவான அம்மையின் மணவாளன் அவன். அதனுல் தானே தழல்மேனிப் பெம்மான் திருவடி எங்களுக்கு இவ்வளவு தண்ணென்றிருக்கிறது? அந்தப் பெருங் கருணையினுல்தானே எங்களையும் ஒரு பொருட்டாகக் கருதி ஆட்கொண்டு விளையாடுகிருன்? "ஐயா, உன் அருள் விளையாட்டினுல் உயிர்கள் உய்ந்து கடைத் தேறுகின்றன என்பதை உணர்ந்தோம். நாங்களே முயன்ருல் பயன் இல்லை. இளைத்து விழுவோம் அவ் வளவுதான். அப்படி எய்த்து விழாமல் உன் அருளால் எங்களைக் காப்பாற்று" என்று இறைவனை வேண்டு கின்ருர்கள். இவர்கள் நீராடுவது ஏதோ தண்ணீர்க் குளத்திலன்று. சிவபெருமானுடைய கருணை வெள் ளத்தில் என்றே தோன்றுகிறது.

மொய்யார் தடம்பொய்கை புக்கு முகேரென்னக்
கையாற் குடைந்து குடைந்துன் கழல்பாடி,
ஐயா! வழியடியோம் வாழ்ந்தோங்காண்; ஆரழல்போற்
செய்யா! வெண்ணீருடி! செல்வா! சிறுமருங்குல்
மையார் தடங்கண் மடந்தை மணவாளா!
ஐயா! நீஆட்கொண் டருளும் விளையாட்டில்
உய்வார்கள் உய்யும் வகையெல்லா முய்ந்தொழிந்தோம்;
எய்யாமற் காப்பாய் எமையேலோர் எம்பாவாய். (11)

---



## ஆர்த்த பிறவித் துயர் கெட

பொய்கையில் நீராடும் பெண்கள், அதன் தன்மையைக் கண்டு, இறைவனுடைய கருணை வெள்ளத்தை எண்ணுகிருர்கள். "பிறவி என்னும் துயரம் நம்மைத் தீயாக வாட்டுகிறது. இந்த வெப்பு நோய் தீர்வதற்கு நாம் மகிழ்ந்து நீராடும் அருட் பொய்கையாக இருக்கிருன் சிவபெருமான். வானத்தை யும், வையத்தையும், எல்லா உயிர்களையும், பொருள் களையும் படைத்து, காத்து, ஒடுக்கி விளையாடுகிருன். தன்னை மறைக்கிருன். பிறகு அருளாலே, தன்னைச் சிற்றம்பலத்தில் அனல் ஏந்தி ஆடும் அழகனுக நம் கண்முன்னே காட்டி அவனை அறிந்துய்யும் ஞானத் தைத் தருகிருன்.

அவன் புகழைப் பாடிக்கொண்டு நீராடுவோம். வளைகளும் அணிகலனும் கலகலவென்று அசைந்து ஒலிக்கும்படி நம்முடைய கூந்தலில் வண்டுகள் மொய்த்து ரீங்காரம் செய்ய, மலர்ப் பொய்கையிலே குடைந்து குடைந்து நீராடுவோம். எம்மை ஆளுடைய பெருமான் பொன்னடியை வணங்கித் துதித்து அவனு டைய மகத்தான அருட்சுனையிலும் அழுந்துவோம்."

ஆண்டவனிடத்தில் அன்பு பூண்ட பெண்கள் இவ்வாறு பாடுகிருர்கள்.

ஆர்த்த பிறவித் துயர்கெட நாமார்த்தாடும்
தீர்த்தனற் றில்லைச் சிற்றம்பலத்தே தீயாடும்
கூத்தன் இவ்வானுங் குவலயமும் எல்லோமும்
காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி

வார்த்தையும் பேசி, வளைசிலம்ப, வார்கலைகள்
ஆர்ப்பரவஞ் செய்ய, அணிகுழல்மேல் வண்டார்ப்ப,
பூத்திகழும் பொய்கை குடைந்துடையான் பொற்பாதம்
ஏத்தி, இருஞ்சுனைநீ ராடேலோர் எம்பாவாய். (12)

---

## பைங்குவளைக் கார் மலரால்

"பொய்கையில் நீர் நிரம்பி இருக்கிறது, தானே தனித்துப் பிறிது ஒரு பொருளின் சார்பும் துணையுமில்லாமல் மங்கல நிறைவு பெற்றுள்ள சிவபெருமானைப் போல. தண்ணீரில் கருங்குவளை மலர்களும், செந்தாமரை மலர்களும் கலந்து முளைத்திருக்கின்றன, குவளை நிறமுடைய உமாதேவியாரும், செந்நிறமுடைய சிவபெருமானும் ஒரே திருமேனியாக விளங்குவதுபோல. பொய்கையிலே பாம்பு துவள்கிறது ; சங்கு புரள்கிறது ; குருகென்ற நீர்ப்பறவைகள் கல்லென்றொலிக்கின்றன. மாதொரு பங்கன் திருமேனியிலும் பாம்பையும், குருகென்ற குருக்கத்தி மாலையையும், சங்கு வளையல்களையும் அவனைக் காணும் பேறு பெற்றவர்கள் காணலாம்.

சார்ந்தவருடைய உடல் அழுக்கைக் கழுவ, பொய்கை உதவுகிறது. இறைவனே சார்ந்த உயிரின் அழுக்கான மும்மலங்களை நீக்குகிறான். ஆகவே இந்தப் பொய்கை எத்தனையோ வகையில் சிவபெருமானைப் போலவே அமைந்து, அவனையே நினைப்பூட்டுகிறது.

இதில் பாய்ந்து முழுகுவோம். நமது சங்கு வளைகள் 'கலீர் கலீ'ரென அவற்றோடு போட்டி இட்டுக் கொண்டு நமது காற்சிலம்புகள் சிலம்பவும், நமது மேனி மகிழ்ச்சியால் பூரிக்கவும், தண்ணீர் பொங்கி



அலைமோதவும், தாமரை மலர்ந்த இந்த அழகிய தடாகத்திலே நீராடுவோம்."

விடியற்காலையில், தாம் மேற்கொண்ட நோன்பை ஒட்டி, நீராடப் பொய்கைக் கரையை அடைந்த கன்னிப் பெண்டிர் இவ்வாறு உள்ளம் துள்ளப் பாடுகிறார்கள்.

பைங்குவளைக் கார்மலரால் செங்கமலப் பைம்போதால்,
அங்கங் குருகினத்தால், பின்னும் அரவத்தால்,
தங்கள் மலங்கழுவு வார்வந்து சார்தலினால்,
எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த
பொங்கும் மடுவில் புகப்பாய்ந்து பாய்ந்து, நம்
சங்கஞ் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்
கொங்கைகள் பொங்கக் குடையும் புனல் பொங்கப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய். (13)

---

## காது ஆர் குழை ஆட

பொய்கையில் நீராடும் கன்னிப் பெண்கள், மகிழ்ச்சி ஆரவாரத்தோடு, புனலாடும் இன்பத்தில் திளைக்கிறார்கள். எப்படி என்பதை அவர்களே பாடுகிறார்கள். காதில் அணிந்த தோடு ஆடுகிறது. உடம்பில் அணிந்த பசும்பொன் நகைகள் ஆடுகின்றன. கூந்தலும் அதில் சூடிய மலர்மாலையும் ஆடுகின்றன. மாலையைச் சுற்றி வட்டமிடும் வண்டுகள் ஆடுகின்றன. இப்படியாக, பெண்கள் குளிர்ந்த நீரில் ஆடுகிறார்கள்.

இந்த இன்பத்தின் எல்லையிலும், அவர்கள் இறைவனை மறக்கவில்லை. அவன் நினைவாகவே இருக்கும்

அவர்களுக்கு, பொய்கை அலைபாய்ந்து, நடிப்பதும் அது தண்ணென்று குளிர்ந்திருப்பதும், சிற்றம்பலத்தில் ஆடுகின்ற பெருமானையும் அவன் அருளையும் நினைவூட்டுகின்றன. ஆனந்தக் கூத்தனைப் பாடுகிறார்கள். வேதம் அவனைப்பற்றிக் கூறும் பொருளைப் பாடுகிறார்கள். அப்பொருளுக்குப் பொருளாய் அவன் நிற்பதைப் பாடுகிறார்கள். எல்லாப் பொருளுக்கும் விளக்கமாய் உள்ள அவனுடைய ஒளித் தன்மையைப் பாடுகிறார்கள். இந்த அகண்டாகாரப் பேரொளி கொன்றை மலர் சூடி அடியவர்க்குக் காட்சி தரும் அற்புதத்தைப் பாடுகிறார்கள். ஆதியும் அந்தமுமாய் அவன் நிற்பதையும், இடையிலே நம்மைக் காத்து வளர்த்து அருளும் உமாதேவியின் திருவடிப் பெருமையையும் ஒன்றாகப் பாடுகிறார்கள்.

ஆடலும் பாடலும் நிறைந்து, இறைவனை எண்ணி இன்பம் பெறும் அடியவரின் பரவசத்தை உணர்த்துகின்ற அழகிய பாடல் இது.

காதார் குழையாடப் பைம்பூண் கலனடக்
கோதை குழலாட வண்டின் குழாமாடச்
சீதப் புனலாடிச் சிற்றம்பலம் பாடி
வேதப் பொருள்பாடி அப்பொருளா மாபாடிச்
சோதி திறம்பாடிச் சூழ்கொன்றைத் தார்பாடி
ஆதி திறம்பாடி அந்தமா மாபாடிப்
பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்
பாதத் திறம்பாடி ஆடேலோர் எம்பாவாய். (14)

---



## ஓர் ஒருகால் எம்பெருமான்

பொய்கையில் நீராடும் பெண்கள் இறைவனை நினைந்து, பாடிப் பாடிப் பரவச நிலையில் இருக்கிறார்கள். அவர்களுள் ஒருத்தி மற்றவர்களோடு சேராது தவித்து நிற்கிறாள். ஆனால் அவளுடைய நினைவும் எல்லை மீறிய பக்தி நிலைதான், அதைப் பார்த்து வியக்கிறார்கள் மற்றையப் பெண்கள்.

“இவளுடைய நிலையைப் பார்த்தாயா? ‘எம்பெருமான், எம்பெருமான்’ என்று வாய் ஓயாது அவன் நாமத்தையே பேசுகிறாள். இதனால் ஏற்பட்ட பெருமகிழ்ச்சியிலே, அவள் விழியிலிருந்து கண்ணீர் அருவிபோலப் பெருகி வருகிறது. கீழே விழுந்து இறைவனை வணங்கியவள் அப்படியே மெய்மறந்து கிடக்கிறாள். ஆனால் அவன் ஒருவனையே வணங்குகிறாள். மற்றையத் தேவர்களைப்பற்றி இவள் எண்ணுவதுகூட இல்லை. அரசர்க்கரசனான ஆண்டவனிடத்தில் இப்படியன்றோ அன்பு செலுத்திப் பித்துப் பிடித்தவள் போலாக வேண்டும். இவ்வாறு இவள் அன்பு முதிர்ச்சி பெறுவதற்கு வழிவகுத்த நம் இறைவனுடைய பெருமைதான் எவ்வளவு? இவளைப் போல் நாமும் கடவுள் பித்தராக வேண்டும். அப்படி ஆவதற்கு இவளைப் பித்தாக்கிய பெருமான் திருவடியை வாயாரப் பாடவேண்டும்; இவ்வாறு அவனை வாழ்த்தியவண்ணம், இந்த அழகிய சுனையில் நீராடுவோம், வாருங்கள்” என்று ஒரு பெண் மற்றவர்களை அழைக்கிறாள். இறைவனிடத்தில் உண்மையான அடியவன், தன்னுடைய அடிமைத் திறத்தையும் இறைவன்பால் தனக்குள்ள அன்பையும் இருப்பதாகவே கொள்ள மாட்டான். மற்ற அடியாரைப் பார்த்து, அவர்தம் அன்பை

வியந்து வியந்து இது எனக்கும் கிட்டாதா என்றே பேசுவான். இதை இந்தப் பாடலில் மணிவாசகப் பெருமான் நமக்கு உணர்த்துகிறார்.

ஓரொருகால் எம்பெருமான் என்றென்றே நம்பெருமான்
    சீரொருகால் வாயோவாள்; சித்தங் களிகூர
நீரொருகால் ஓவா நெடுந்தாரை கண்பனிப்பப்
    பாரொருகால் வந்தனையாள்;
                விண்ணோரைத் தான்பணியாள்;
பேரரையற் கிங்ஙனே பித்தொருவர் ஆமாறும்
    ஆரொருவர் இவ்வண்ணம்
                ஆட்கொள்ளும் வித்தகர் தாள்,
வாருருவப் பூண்முலையீர்! வாயார நாம்பாடி
    ஏருருவப் பூம்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய். (15)

---

## முன்னிக் கடலைச் சுருக்கி

பக்தியில் அழுந்திய பெண்கள், பொய்கையில் நீராடும்போது, பொய்கைப் புனலுக்கும், பூமியின் வளத்திற்கும் ஆதாரமான மழையை எண்ணுகிறார்கள். ஆனால் எந்த எண்ணமும், அவர்களுக்கு இறைவனுடைய நினைவோடே கலந்து வருகிறது.

"மேகமே, கார் காலம் வருமுன், கடலைக் குடித்து, கடல்கூடச் சுருங்கும்படி அவ்வளவு நீரை அதனிடமிருந்து பற்றிக் கொண்டு வா. எப்படி வரவேண்டும் தெரியுமா? எம்மை ஆளுடையாள் உமாதேவியின் திருமேனிபோல் உருவம் கறுத்து வா. அவளுடைய சிற்றிடையைப்போல ஒளிவீசித் துவளும் மின்னலோடு வா. எங்கள் அன்னையின் திருவடியில் சிலம்பும் பொன் சிலம்பின் ஒலியோ என்னும்படிக்கு இடியை முழக்கிக் கொண்டு வா. அவளுடைய புருவம்போல வளைந்து எழில் காட்டும் வானவில்லைச் சுமந்து வா. அவளோடு இணைபிரியாது விளங்கும் சிவபெருமான் தன்னுடைய அடியார்க்கு, தானாகவே முன்வந்து சுரக்கும் அருளின் வடிவமாக வா. அதுபோலவே உயிர்களுக்கெல்லாம் நீங்காத பெருஞ்செல்வத்தை வற்றாத வளத்தைத் தந்து காப்பாற்று."

மேகத்தின் வருகையும், இறைவியின் எழிலும், இறைவனுடைய வரையிலா அருளும், அன்பர் உள்ளத்திலே ஒன்றாகப் பின்னி மலர்வதை இப்பாடல் பேசுகிறது.

முன்னிக் கடலைச் சுருக்கி யெழுந்துடையாள்
    என்னத் திகழ்ந்தெம்மை ஆளுடையாள் இட்டிடையின்
மின்னிப் பொலிந்தெம் பிராட்டி திருவடிமேல்
    பொன்னஞ் சிலம்பிற் சிலம்பித் திருப்புருவம்
என்னச் சிலைகுலவி நந்தம்மை ஆளுடையாள்
    தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு
முன்னி அவள் நமக்கு முன்சுரக்கும் இன்னருளே
    என்னப் பொழியாய் மழையேலோர் எம்பாவாய். (16)

---

## செங்கண் அவன்பால்

வைகறையிற் புனலாடும் பக்திப் பெண்டிரில் ஒருத்தி பக்கத்தில் உள்ள, தன்னுடைய தோழிமாரில் ஒருத்தியைப் பார்த்துச் சொல்கிறாள்: "வாசனை பொருந்திய கூந்தலை உடையவளே, நமக்குக் கிடைத்துள்ள இன்பத்தின் பெருமையை உணர்ந்தாயா? திருமாலுக்கு இது கிட்டவில்லை. நான்முகனுக்கோ,

மற்றைய தேவர்களுக்கோ இது வாய்க்கவில்லை. அத்தகைய தனிப் பேரின்பத்தை, எங்கும் ஈடு இல்லாத இறை அனுபவத்தை, நம்முடையதாகச் செய்துவிட்டான் சிவபெருமான்.

அந்த அளவுக்கு ஒன்றுக்கும் பற்றாத நம்மையும் பாராட்டி, ஒப்பற்ற பெருமையை அளித்தான். இங்கே, இந்த உலகத்திற்கு, மேலொரு பொருளுமில்லா மெய்ப் பொருளாகிய இறைவன் நம் வீடு தேடி வந்தான். வீடாகிய அவன் மலரடிச் செல்வத்தை அளித்தான். அந்த வல்லவனை, கருணை ததும்பும் விழியுடைய அந்தத் தலைவனை, அடிமைகளாகிய நமக்கு அமுதம் போன்றவனை நம்முடையவன் என்று பேசும் உரிமையை நமக்குத் தந்த சிவபெருமானை நாம் பாட வேண்டாமா? பாடிக் குளிர்ந்த மனத்தோடு அவன் அருளின் மற்றொரு அடையாளமான இப் புதுப் புனல் வெள்ளத்தில் ஆடுவோம், வா."

இப்படியாகப் புனலாடும் கன்னியரில் ஒருத்தி இன்னொருத்தியைப் பார்த்துப் பேசுவதாக அமைந்துள்ளது இப்பாடல்.

செங்கண் அவன்பால் திசைமுகன்பால் தேவர்கள்பால்
எங்கும் இலாததோர் இன்பம்நம் பாலதாக்
கொங்குண் கருங்குழலி நந்தம்மைக் கோதாட்டி
இங்கு நம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச்
செங்கமலப் பொற்பாதந் தந்தருளுஞ் சேவகனை
அங்கண் அரசை அடியோங்கட் காரமுதை
நங்கள் பெருமானைப் பாடி நலந்திகழப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோர் எம்பாவாய். (17)

—



## அண்ணாமலையான் அடிக்கமலம்

முந்தைய பாடலைப்போல, இப்பாடலும் ஒருத்தி மற்றொருத்திக்குக் கூறியதாக அமைந்திருக்கிறது. இருவரும் நீராடக் கருதி, பொய்கைக் கரைக்கு வந்துள்ளனர். விடியற்காலம், கீழ் வானிலிருந்து சூரியனது ஒளிக்கதிர்கள் புறப்படுகின்றன. இருள் எங்கோ ஓடி ஒளிகிறது. நட்சத்திரங்கள் அடேயப்பா எத்தனை எத்தனையாகச் சேர்ந்து மின்னின. அவையெல்லாம் தமது மெல்லிய ஒளி மங்கி மறைகின்றன. இந்தக் காட்சியைத் தோழிக்குக் காட்டி, ஒருத்தி சொல்கிறாள்: "பார்த்தாயா? கோடி கோடி நட்சத்திரங்கள் ஒரு சூரியன் முன் மறைந்ததை. இப்படித்தான் அண்ணாமலையில் அனல்வடிவாய் வீற்றிருக்கும் சிவபெருமானுடைய தாமரை அடிகளில் எண்ணிறந்த தேவர்கள் விழுந்து வணங்கும்போது, அவர்களுடைய மகுடங்களில் வரிசை வரிசையாய் உள்ள இரத்தினங்கள் இறைவனுடைய திருமேனிப் பேரொளியின் முன் வலியிழந்து ஒளி மங்கிப் போகின்றன. உதயமாகி விட்டது. இந்தப் பொழுது கழிவதற்குள்-நமக்கு இங்கே உள்ள பொழுது கழிவதற்குள்-எல்லாமாகி, அல்லனுமாய் உள்ள சிவபெருமானை நினைப்போம். ஆண், பெண், அலி அனைத்தும் ஆனான். ஆனால் அவன் எப்பாலோ? விண்ணுலகமானான், மண்ணுலகமானான், இவ்வளவிற்கும் அப்பாலானான். இவ்வாறு அப்பாலுக்கப்பாலும் இப்பாலுக்கிப்பாலுமான அவன், அன்பர்க்குக் கண்முன்னே காட்சி தரும் அமுதமும் ஆனான். அவன் திருவடிகளைத் திரும்பத் திரும்பப் பாடுவோம். பாடியவண்ணம் புனலாடுவோம்" என்கிறாள் சிவன்பால் சித்தம் வைத்த அந்தப் பெண்.

அண்ணா மலையான் அடிக்கமலம் சென்றிறைஞ்சும்
விண்ணோர் முடியின் மணித்தொகை வீறற்றாற்போல்
கண்ணார் இரவி கதிர்வந்து கார்கரப்பத்
தண்ணார் ஒளிமழுங்கித் தாரகைகள் தாமகலப்
பெண்ணாகி ஆணாய் அலியாய்ப் பிறங்கொளிசேர்
விண்ணாகி மண்ணாகி இத்தனையும் வேறாகிக்
கண்ணார் அமுதமுமாய் நின்றான் கழல்பாடிப்
பெண்ணே! இப் பூம்புனல் பாய்ந்
தாடேலோர் எம்பாவாய். (18

—

## உன் கையில் பிள்ளை உனக்கே

வைகறையில் நீராடி எழுந்த பெண்கள், ஒன்றாகச் சிவபெருமானை வேண்டிக் கொள்கிறார்கள். இறைவனுக்குத் தெரியாதா உயிர்களுக்கு எது தேவையானது என்று? இவர்கள் வேண்டாமலேயே வேண்டுவன எல்லாம் அருளும் தயாநிதியாயிற்றே அவன். பிறகு வேண்டுவானேன்? ஆசைபற்றி வேண்டுகிறார்கள். அதையும் சொல்லிவிடுகிறார்கள். "எங்கள் தலைவனே, சிவபெருமானே, உன் கையில் உள்ள பிள்ளை உனக்கே அடைக்கலம் என்று பிள்ளையின் தாயிடம் யாராவது சொல்வார்களா? மாட்டார்கள். உன் பிள்ளைகளாகிய நாங்கள் உனக்கே அடைக்கலம், எங்களுக்கு வேண்டுவது எது, நன்மை பயப்பது எது என்பது உனக்குத் தெரியும். அதை எங்களுக்கு அளிக்கவும் உன் அலகிலாக் கருணை முற்படும். என்றாலும் எங்கள் ஆசையைச் சொல்கிறோம். கேட்டருள்" என்கிறார்கள்.

என்ன ஆசையோ இது? முன்னே சொன்னது தான். உன்னுடைய அடியார்களே எங்களுக்குக்



கணவராக வாய்க்க வேண்டும். மற்றவர்களைச் சேராது நீ காப்பாற்ற வேண்டும். உன் அடியவர்களுக்கே நாங்கள் பணிபுரிய வேண்டும். அதுதானே உனக்குச் செய்யும் பணி. அதையே விரும்புகிறோம். உன்னைத் தவிர வேறு ஒருவருக்கும் பணி செய்யாமல், இரவும் பகலும் உன்னைத் தவிர வேறொன்றையும் காணாமல் நாங்கள் இருந்தால் போதும். அதை அருளுவாயா? அருளினால், சூரியன் எங்கே உதித்தால் எங்களுக் கென்ன? எதைப்பற்றி நாங்கள் கவலைப்படப் போகிறோம்" என்று முடிக்கிறார்கள்.

உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலமென்று
அங்கப் பழஞ்சொல் புதுக்குமெம் அச்சத்தால்,
எங்கள் பெருமான் உனக்கொன் றுரைப்போம்கேள்;
எங்கொங்கை நின்னன்பர் அல்லார்தோள் சேரற்க;
எங்கை உனக்கல்லா தெப்பணியும் செய்யற்க;
கங்குல் பகலெங்கண் மற்றொன்றுங் காணற்க;
இங்கிப் பரிசே எமக்கு எங்கோன் நல்குதியேல்,
எங்கெழிலென் ஞாயிறு எமக்கேலோர் எம்பாவாய். (19)

—

## போற்றி அருளுக

இறைவனிடத்தில் அன்பு செலுத்தும் கன்னிப் பெண்கள், உண்மையான களங்கம் அற்ற அடியவர்களுக்கு எடுத்துக்காட்டாக நிற்கும் இவர்கள், அவன் அருளை வேண்டுகிறார்கள். பிறகு அவனைப் போற்றுகிறார்கள். இதுவே திருவெம்பாவையின் மங்கலப் பாடல் கூறுவது. எல்லாவற்றிற்கும் ஆதியாக உள்ள உன் மலர்ப் பாதத்தை எங்களுக்குத் தந்தருள். எல்லாப்

பொருள்களுக்கும் முடிவாக உள்ள உன் சிவந்த திரு
களை எங்களுக்கு அருள். இதுவே வேண்டுகோள்.
உடனே நிறைவேறுகிறதென்றே தோன்றுகி
இறைவனுடைய திருவடி தமக்குக் கிட்டவேண்
என்று வேண்டி நிற்போர், அது கிட்டியதும் அ
பெருமையில் தம்மை மறந்து அதைப் போற்
கொண்டுதானே நிற்பார்கள்? அப்படித்தான் செ
கின்றனர் இக்கன்னிப் பெண்டிர். முதலில் இறை
உன் திருவடியை அருள்வாயாக என்கிறார்கள். உட
அத்திருவடியைப் போற்றத் தலைப்படுகிறார்கள்: "உ
பாத மலரே ஆதியாய் நிற்பது; அதுவே முடிவாக
விளங்குவது. எல்லா உயிர்களும் தோன்றுவதற்கு
காரணமாய் உள்ள உன் திருவடிகளுக்கு வணக்கம்.
எல்லா உயிர்களையும் நிலைநிறுத்தி அவற்றிற்கு போகங்
களை அருளும் உன் கழலடிகளுக்கு வணக்கம். எல்லா
உயிர்களுக்கும் முடிவாக உள்ள உன் இணை அடி
களுக்கு வணக்கம். திருமால் அயன் முதலான தேவர்
களும் காண முடியாமல் உன்னால் மறைக்கப்படும்
உன் தாமரை திருவடிகளுக்கு வணக்கம். எங்களையும்
ஆட்கொண்டு எங்களுக்கும் உய்வு அளிக்கும் உன்
பொன்மலரடிகளுக்கு வணக்கம்.

இப்படியாக இறைவன் திருவடிகளை அவனுடைய ஐந்தொழில்களோடு பொருத்திப் போற்றி நிற்கும் இப்பெண்களுக்கு, இனி மார்கழி நோன்பு தேவையில்லை. நோன்பு எதுவும் தேவையில்லை. அவர்கள் வேண்டுகோளை ஏற்று, இறைவன் தனது திருவடியை அவர்களுக்கு அளித்துவிட்டான் என்றே உணர்கிறோம். என்றாலும், பக்தியில் அழுந்திய இப்பெண்களே,



அவனைப் பெறுவதைவிட, அவனிடம் பக்தி செய்வதையே பெரிதாகக் கருதினார்களோ என்று நாம் நினைக்கும்படிக்கு "மார்கழி நீராடுவோமாக, அவனிடத்திலே அன்பு வைத்து நோன்பு நோற்கும் இன்பத்திலே நிற்போமாக" என்று சொல்கிறார்கள். இந்த அருமையான காட்சியோடு, இதைத் தரும் பாடலோடு, 'திருவெம்பாவை' நிறைவடைகிறது.

**போற்றி! அருளுக, நின் ஆதியாம் பாதமலர்**
**போற்றி! அருளுக, நின் அந்தமாம் செந்தளிர்கள்**
**போற்றி! எல்லா உயிர்க்குந் தோற்றமாம் பொற்பாதம்**
**போற்றி! எல்லா உயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்**
**போற்றி! எல்லா உயிர்க்கும் ஈறாம் இணையடிகள்**
**போற்றி! மால் நான்முகனும் காணாத புண்டரிகம்**
**போற்றி! யாம் உய்ய ஆட்கொண்டருளும் பொன்மலர்கள்**
**போற்றி! யாம் மார்கழிநீ ராடேலோர் எம்பாவாய்.** (20)

# திருப்பள்ளி எழுச்சி

—: o :—

## போற்றி என் வாழ்முதல்

திருப்பெருந்துறையில் உள்ள சிவபெருமானைத் துயில் உணர்த்துவதாக, 'திருப்பள்ளி எழுச்சி' அமைந்திருக்கிறது. சிவபெருமானை உறக்கத்திலிருந்து எழுப்புவதாவது! அப்பரம்பொருள் உறங்குமா? இல்லை, உறங்கவில்லை. ஆனால் நாம் உறங்குகின்ற காரணத்தினால், எங்கும்—நம் உள்ளத்திலேயும் உள்ள அவன், நமக்குத் தென்படாமல் மறைந்து நிற்கிறான். இம் மறைப்பு அவனை நோக்கி நாம் திரும்பினால் அவன் அருளால் நீங்குகிறது. இந்த அருள் கிட்டவேண்டும் என்று உயிர்கள் வேண்டுவதை, அவனைத் துயிலுணர்த்துவதாகப் பாவிக்கிறார் மாணிக்கவாசகர். இந்தப் பாவனையின் அருமையான பாடல் வடிவமே மாணிக்க வாசகரின் திருப்பள்ளியெழுச்சி.

"எம்பெருமானே, என் வாழ்விற்கு ஆதாரமாய் நிற்கும் மூலப்பொருளே, பொழுது புலர்ந்தது" என்று பாடல் தொடங்குகிறது. உண்மைதான், அவனே யாவும் என்று எண்ணத் தலைப்பட்ட உடனே, நமது வாழ்வில் இருள் விலகுகிறது. நம்முடைய பொழுதில் விடியற்காலம் தோன்றுகிறது. பெருமானே உன் அழகிய திருவடிகளில் மலர்களைத் தூவி உன் முகத்தில்

மலரும் அருட் புன்முறுவலை இதயம் களித்து ஏற்று, உன்னைத் தொழுகின்றோம். தாமரை, இதழ்விரிக்கும் குளிர்ந்த வயல்கள் சூழ்ந்த திருப்பெருந்துறையில் அமர்கின்ற சிவபெருமானே, நந்திக் கொடியை உடையவனே, எம்மை ஆளுடைய தலைவனே, பள்ளியிலிருந்து எழுந்தருளுவாயாக" என்று பாடுகிறார் மாணிக்கவாசகர். சிவபெருமான் எங்கும் இருக்கிறான். ஆகவே, அவனுடைய இடம் பெருந்துறைதானே. இப்படி எங்கும் பரந்து கரந்து நிற்கின்ற அருள், பெருந்துறைச் செல்வம், சிறிய துறையாகிய ஒரு உயிரின் உள்ளேயும் அது காணும்படி எழுந்திருக்க வேண்டும் என்பதே மணிவாசகப் பெருந்தகையின் வேண்டுகோள்.

போற்றியென் வாழ்முத லாகிய பொருளே!
புலர்ந்தது; பூங்கழற் கிணைதுணை மலர்கொண்டு
ஏற்றிநின் திருமுகத் தெமக்கருள் மலரும்
எழில் நகை கொண்டுநின் திருவடி தொழுகோம்;
சேற்றிதழ்க் கமலங்கள் மலருந்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவபெருமானே!
ஏற்றுயர் கொடியுடையாய்! எனை யுடையாய்
எம்பெருமான்! பள்ளி எழுந்தருளாயே! (1)

---

## அருணன், இந்திரன் திசை அணுகினான்

இந்திரனுடைய திசையாகக் கருதப்படுகிறது கிழக்கு. இங்கே அருணன் தோன்றினான். இருள் ஓடி மறைந்தது.

"சிவபெருமானே, உன் திருமுகத்தின் கருணையைப் போல, கதிரவன் எழுந்தான். உன் விழிகளைப் போலத்



தாமரைப் பூக்கள் மலர்ந்தன. அவற்றின் அருகிலே திரள் திரளாக வண்டுகள் ரீங்காரம் செய்து கூடின. இப்படித்தான் உன் அருள் விழியிலிருந்து உயிர்களுக்குப் பெருகும் ஆனந்தத் தேனைப் பருக, அடியவர்கள் கூடுவார்களோ? இவ்வண்டுகளைப் போலவே, அவர்களும் உன் கருணையை எண்ணி விம்மி விம்மி மெய் மறந்து உன் புகழைப் பாடுவார்களோ? ஆனால் அவர்களை என்று வந்தாய் என்ற குறிப்போடு அழைத்து அவர்கள் நாடி வரும் அருள்தேனை அளிப்பதற்கு, உன் திருவிழிகள் மலர்ந்து இருக்கவேண்டாமா? எல்லாம் அறிந்த நீ, இதைக் கருத வேண்டாமா? திருப்பெருந்துறையில் உறையும் சிவபெருமானே; இந்த உதயக் காட்சியும், அண்டம் அளாவிய உன் பெருந்துறையில் ஒரு பகுதிதான். அதை உணர்வதற்கு, இன்பமலையாக எங்கள் முன் தோன்றி ஒப்பற்ற உன் பேரருட் செல்வத்தை எங்களுக்கு அளிக்கவேண்டும். அதைப் பெறுவதற்கு, எங்களால், ஒன்றுக்கும் பற்றாத ஏழைச் சிறு உயிர்களால் முடியுமா? நீ அலைகடல் போன்றவன். முழுவதையும், உயிராகிய அதைச் சிறு கிணற்றில் ஏற்றுக்கொள்ள முடியுமா? ஏன் முடியாது? உன் அலகிலாப் பெருமையால் அலைகடல் போன்றவனே நீ. ஆனால், அருட்கடலாகவும் நீ இருப்பதால், வரம்புள்ள உயிர்கள் வரம்பில்லா உன்னையும், அறிந்து கொள்ளுகின்றன.

அருட்கடல், என்றும் உறங்காது, உயிர்களிடத்தில் பரிவு என்ற அலை மோதும் அருங்கடல். இக்கடலும் உறங்குமா? உறங்கினால் எங்களுக்கு உய்வேது? எழுந்தருள், இறைவனே, எங்களை ஆட்கொள்" என்று பாடுகிறார் மாணிக்கவாசகர்.

அருணன் இந்திரன் திசை அணுகினன்; இருள்போய்
அகன்றது; உதயம்நின் மலர்த்திரு முகத்தின்
கருணையின் சூரியன் எழஎழ, நயனக்
கடிமலர் மலர, மற்றண்ணலங் கண்ணாந்
திரள்நிரை அறுபதம் முரல்வன; இவையோர்.
திருப்பெருந் துறையுறை சிவபெருமானே!
அருள்நிதி தரவரும் ஆனந்த மலையே!
அலைகடலே! பள்ளி எழுந்தருளாயே! (2)

---

## கூவின பூங்குயில் கூவின கோழி

"உதயம் மலர்ந்தது என்பதை, இதோ குயில்களும், கோழிகளும் கூவிக்கூவி அறிவிக்கின்றன. மற்றையப் பறவைகளும், எங்கிருந்தோ வரும் சங்கின் ஒலியும் அதே செய்தியைச் சொல்கின்றன. உதயத்தின் ஒளி தோன்றவே நட்சத்திர ஒளி மங்குகிறது. இப்படித்தான் மெய் ஞானம் வரும்போது விபரீத ஞானம் மறையுமோ? ஆனால் மெய் ஞானம் எங்களுக்கு வரவேண்டுமே? அதற்கு உன் திருவடிக் காட்சியே வழி. உன் திருவடி வீரக் கழல் அணிந்தது. உயிர்களின் அறியாமையை, மலத்தை, வினையை அருளினால் வெற்றி கண்ட உன் வீரத்தின் அடையாளமே உன் திருவடியிற் பொலியும் கழல். உன் கழலடியை எங்களுக்குக் காட்டு. அப்போதுதான் ஞான பரிபக்குவம் என்ற உண்மையான உதயம் எங்கள் உள்ளத்தில் மலரும். அந்த நிலையில் நீ திருப்பெருந்துறையில் உறைபவன் என்பதை உணர்வோம். பெருந்துறையன் ஆனபடியாலே சிற்றறிவுடைய



யாவராலும் அறிவதற்கு அரியவன் என்பதையும் தெரிந்துகொள்வோம். எமது அறிவுக்கும் நீ புலனாவது உன் அருளினாலே, உன் எளிமையினாலே என்பதை அறிந்து நிற்போம். ஆனால் எப்போது தெரியுமா? நீ எங்கள் உள்ளத்தில் விழித்தெழும்போதுதான். பெருமானே, இதைச் செய்யத் திருவுளங்கொள்" என்று கனிந்து வேண்டுகிறார் மாணிக்கவாசகர்.

கூவின பூங்குயில்; கூவின கோழி;
குருகுகள் இயம்பின; இயம்பின சங்கம்;
ஓவின தாரகை யொளி; ஒளி உதயத்து
ஒருப்படு கின்றது விருப்பொடு நமக்கு
தேவ! நற் செறிகழல் தாளிணை காட்டாய்!
திருப்பெருந் துறையுறை சிவ பெருமானே!
யாவரும் அறிவரி யாயெமக் கெளியாய்!
எம்பெருமான்! பள்ளி எழுந்தருளாயே! (3)

---

## இன்னிசை வீணையர்

ஆண்டவனை வழிபடுவதற்கு ஆயிரம் வழிகள். அப்படித்தானே இருக்கமுடியும்? அவனே பெருந்துறை மேவியவன், அலகில்லாதவன். அவனை நாடிச் செல்லும் ஒவ்வொரு உயிரும் அதனதன் பக்குவத்திற்கு ஏற்றபடி அவனை வணங்கி வாழ்த்துகிறது. அவனுடைய அருள் ஒளி, உள்ளத்தில் விடுதலை உதயமாக அரும்பும்போது, அடியவர் சிலர், வீணையும் யாழும் கொண்டு, இன்னிசையால் அவனைப் பரவுகின்றனர். ரிக்வேதம் போன்ற மந்திரங்களையும், துதிப் பாடல்களையும் ஓதி, அவனை வாழ்த்துகின்றனர் சிலர். நெருங்கித்

தொடுத்த மலர்மாலை கொண்டு அவனை அருச்சிக்கின்றனர் சிலர். அவனுடைய ஆயிரம் ஆயிரம் நாமங்களைச் சொல்லி உருகுகிறார்கள் சிலர். அன்பு மேலீட்டால் சிலர் அழுகிறார்கள், சிலர் வசமிழந்து துவள்கிறார்கள், சிலர் கைகூப்பிப் பரவச நிலையில் நிற்கிறார்கள்.

"விடியற்காலத்தில் நடைபெறும் காட்சி இது. இறைவனுடைய அருள் ஒளியை எதிர்நோக்கி, அடியவர்கள் பலபடியாக அவனைப் போற்றி வணங்கி உய்ய முனைகிறார்கள். அருளொளி வருகிறது, இவர்களுக்கு வருகிறது, இவர்களைப்போல வழிபட அறியாத எனக்கும் கூட வருகிறது. அதுதானே இறைவனுடைய வரம்பில்லாத கருணையின் தன்மை. பெருமானே, அது விரைவிலே எங்களை அணைக்கும்படி உன் பள்ளியிலிருந்து எழத் திருவுளங்கொள்" என்று இறைஞ்சுகிறார் மாணிக்கவாசகர்.

இன்னிசை வீணையர், யாழினர், ஒருபால்;
இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்;
துன்னிய பிணைமலர்க் கையினர், ஒருபால்;
தொழுகையர், அழுகையர், துவள்கையர், ஒருபால்;
சென்னியில் அஞ்சலி கூப்பினர், ஒருபால்;
திருப்பெருந் துறையுறை சிவ பெருமானே!
என்னையும் ஆண்டுகொண் டின்னருள் புரியும்
எம்பெருமான்! பள்ளி எழுந்தருளாயே! (4)

---



## பூதங்கள் தோறும் நின்றாய்

"திருப்பெருந்துறையில் வாழும் சிவபெருமானே, உன்னை முழுவதும் கண்டவர் யார்?

வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்
கோனாகி யான் எனது என்று அவர் அவரைக்
கூத்தாட்டுவானாகி

நிற்கும் உன்னை எப்படி முழுவதும் காண்பது? ஐம்பூதப் பெரு வைப்பில் எங்கும், ஒவ்வொரு பொருளிலும் கலந்து நிற்கிறாய் என்றும், போக்குவரவு இல்லாதவன் என்றும் அறிஞர்கள் சொல்கிறார்கள். அவ்வளவுதான். ஏதோ உன்னைப் பாடுகிறார்கள். உன்னை நினைந்து ஆனந்தக் கூத்தாடுகிறார்கள். ஆனால், ஐயனே, உன்னை நேரே பார்த்து அறிந்தவர்களை நாங்கள் இன்னும் கேட்டு அறிந்ததில்லை. அப்படி, சிந்தனைக்கு எட்டாமல் நிற்கிறாய். என்றாலும், எங்கள் குற்றங்களைப் பொருட்படுத்தாமல் எங்கள் முன்னே தோன்றுகிறாய். அவற்றைக் களைகிறாய். எம்மை ஆட்கொண்டு அருள்கிறாய். உனக்கும் உறக்கமா? பள்ளிவிட்டெழுந்தருள் பெருமானே" என்று பாடுகிறார் மாணிக்கவாசகர்.

பூதங்கள் தோறுநின் றாயெனின் அல்லால்
போக்கிலன் வரவிலன் எனநினைப் புலவோர்
கீதங்கள் பாடுதல் ஆடுதல் அல்லால்
கேட்டறியோம், உனைக் கண்டறிவாரைச்
சீதங்கொள் வயல் திருப் பெருந்துறை மன்னா!
சிந்தனைக்கும் அரியாய்! எங்கள் முன்வந்து,
ஏதங்கள் அறுத்தெம்மை ஆண்டருள் புரியும்
எம்பெருமான்! பள்ளி எழுந்தருளாயே! (5)

---

## பப்பு அற வீட்டு இருந்து உணரும்

"பெருமானே, உமையின் மணவாளா, உன் அன்பர்களின் சாதனை மகத்தானது. எளிதிலே விடமுடியாத பற்றை, அவர்கள் முழுவதும் விட்டார்கள். இந்த நிலையிலிருந்து, உன்னை உணர்ந்தார்கள். இதனால், பாசத்தை அறுத்தார்கள். என்றாலும், உன்னை நோக்கித் திரும்பும்போது, இங்கே இவ்வுலகில் அவர்கள் இருக்கும் காரணத்தால், உன்னோடுள்ள தொடர்பை, ஏதோ மனித உறவு ஒன்றைப் போலவே வழங்குகிறார்கள்.

நாயகனிடம் அன்பு செலுத்தும் தலைவியின் நிலையிலே நின்று உன்னை வணங்குகிறார்கள். இந்தப் பிறவியில் இருக்கும் வரையில் வேறு எந்த வகையிலே உன்னுடைய தொடர்பை உணர்த்த முடியும்? ஆனால், பிறவி நீங்க வேண்டும் என்பதற்காகவே, இப்படியெல்லாம் எங்கள் ஈடுபாட்டை வளர்க்கிறோம். அது உனக்குத் தெரியாதா? தெரிந்தே, பிறவியை நீக்கி எங்களை ஆட்கொள்ளுகிறாய். எழுந்தருள், பெருமானே, பள்ளி நீங்கி எழுந்தருள்" என்று வேண்டுகிறார் மாணிக்கவாசகர்.

பப்பற வீட்டிருந் துணரும்நின் அடியார்
　　பைந்தனை வந்தறுத்தார்; அவர் பலரும்
மைப்புறு கண்ணியர்; மானுடத் தியல்பின்
　　வணங்குகின்றார் அணங்கின் மணவாளா!
செப்புறு கமலங்கள் மலருந்தண் வயல்சூழ்
　　திருப்பெருந் துறையுறை சிவ பெருமானே!
இப்பிறப் பறுத்தெமை ஆண்டருள் புரியும்
　　எம்பெருமான்! பள்ளி எழுந்தருளாயே! (6)

---



## அது பழச் சுவை என

"பழத்தில் உள்ள சுவைபோல, உலகமெங்கும் இன்பமாய்க் கலந்து நிற்கிறது பரம்பொருள். விடு என்னும் அழிவற்ற பெருநிலையைத் தருவதால், அது அடியவர்க்கு அமுதமாய் விளங்குகிறது. அறிவதற்கு முடியாததாயும், அதே சமயத்தில் அன்பரால் எளிமையாக உணர முடிகின்ற ஒன்றாயும் உள்ளது, அம்மெய்ப்பொருள். இவ்வாறு திருப்பெருந்துறை அரசே, உன்னைப் பற்றிப் பேசுகிறார்கள் தேவர்கள். பேசுகிறார்களே தவிர அவர்களும் உன்னை உள்ளபடி அறிந்ததில்லை. ஆனால், இறைவா, இதுதான் உன்னுடைய திரு உருவம். இதோ கண்முன் நிற்கும் நீயே பரம்பொருள் என்று நாங்கள் சொல்லும்படியாக, எங்களுக்கு உன்னைக் காட்டி அருள்கிறாய். தேன் சொரியும் மலர்ச்சோலை சூழ்ந்த உத்தர கோச மங்கையில், நாங்கள் காணும்படி கோயில் கொண்டாய். எந்த வகையில், இப்பேரருளுக்கு உகந்தவர்களாக எங்களைச் செய்துகொள்வது? அந்த அறிவையும் நீதான் எங்களுக்கு அளிக்க வேண்டும், அளித்து எங்களை உன் அடிமைகளாக்கிக் கொள். நீ உணர்த்தும் முறை எதுவோ, அதனைக் கேட்டு, அதன்வழியே நிற்போம். இந்த உறுதியை எங்களிடம் நிலைத்திருக்கப் பள்ளி நீங்கி எழுந்து வா" என்று இறைவனை அழைக்கிறார் மாணிக்கவாசகர்.

அதுபழச் சுவையென அமுதென அறிதற்கு
　　அரிதென எளிதென அமரரும் அறியார்
இதுஅவன் திருவுரு ; இவனவன் ; எனவே
　　எங்களை ஆண்டுகொண் டிங்கெழுந் தருளும்

மதுவளர் பொழில் திருஉத்தர கோச
மங்கையுள் ளாய்! திருப் பெருந்துறை மன்னு,
எதுஎமைப் பணிகொளும் ஆறது கேட்போம்;
எம்பெருமான்! பள்ளி எழுந்தருளாயே! (7)

---

## முந்திய முதல், நடு, இறுதியும்

“இறைவனே, நீயே உலகங்கள் அனைத்துக்கும் ஆதியாய் நின்று அவற்றைப் படைத்தாய். நடுவாய் நின்று அவற்றைக் காக்கின்றாய். பிறகு முடிவாய் நின்று, அவற்றை அழிக்கின்றாய். மும்மூர்த்திகளும் உன் தன்மையை அறியவில்லை. அப்படியானால் வேறு யார் உன்னை அறிய முடியும்?

இப்படி அறிதற்கரியவனான நீ உன் அடியவர்களை ஆட்கொள்ளக் கருதி, அருள் வடிவான உமாதேவியோடு, இங்கே வருகின்றாய். உன் அடியவர்கள் வாழும் பழங் குடிசை ஒவ்வொன்றிற்கும் வந்திருக்கின்றாய். ஆம், பழைய வினைகளால் ஆன உடம்பெனும் இந்தச் சிறு குடிசைக்குள், பரம்பொருளாகிய நீ வருகிறாய். வந்து, சிவந்த அனல் போன்ற திருமேனியைக் காட்டி, ‘அன்பனே, கலங்காதே, அறியமுடியாது என்றெண்ணி வருந்தாதே. நீ வாழும் குடிசைக்குள்ளேயே என்னைக் கண்டுகொள்’ என்று அருள்கிறாய். வெளியிலே இந்த உலகிலும், நீ உறைகின்ற இடமாகத் திருப்பெருந்துறை என்ற தலத்தை எங்களுக்குக் காட்டுகின்றாய். மனித வடிவம் தாங்கி வந்து, இங்கே திருப்பெருந்துறையில் எனக்கு ஞானாசிரியனாக விளங்கினாய். இப்படி அருள் புரிந்து, எங்களுக்கு அமுதமாக நிற்கும் உன்னை, எழுந்தருள், பள்ளியெழுந்து எங்களைக் காத்தருள்” என்றே வேண்டுகிறேன்.



இவ்வாறு பேசுகின்றார் மாணிக்கவாசகர்.

முந்திய முதல்நடு இறுதியும் ஆனாய்;
மூவரும் அறிகில ரியாவர்மற் றறிவார்?
பந்தணை விரலியும் நீயும் நின்னடியார்
பழங்குடில்தொறும் எழுந்தருளிய பரனே!
செந்தழல் புரைதிரு மேனியுங் காட்டித்
திருப்பெருந் துறையுறை கோயிலுங் காட்டி,
அந்தண னாவதுங் காட்டிவந் தாண்டாய்!
ஆரமுதே! பள்ளி எழுந்தருளாயே! (8)

---

## விண்ணகத் தேவரும்

“தேவர்களும் அடையமுடியாத மேலான மெய்ப்பொருள், இங்கே மண்ணுலகத்திற்கு வந்தது. திருப்பெருந்துறையில் கோயில் கொண்டது. இதனால் அடியவர்களுக்கு இங்கே பெரு வாழ்வு அளித்தது.

பெருமானே, இதை நாங்கள் உணர்ந்து உன்னுடைய வழி வழி அடிமைகளாக உள்ள பாக்யத்தைப் பெறும்படி அருள். எங்கள் கண்ணிலே நின்று, காணும் பொருளையெல்லாம் உன் வடிவமாக்கி, தேனைப் போலத் தித்திக்கின்றாய். இந்த அனுபவத்தின் மூலமாக எங்களுக்குச் சாகாப் பெருநிலையே கிட்டி விட்டது. நீ எங்களுக்கு அமுதமானாய்.”

விண்ணகத் தேவரும் நண்ணவு மாட்டா
விழுப்பொருளே ! உன தொழுப்படியோங்கள்
மண்ணகத் தேவந்து வாழச்செய் தானே !
வண்திருப் பெருந்துறை யாய் ! வழியடியோம்
கண்ணகத்தே கண்டு களிதரு தேனே !
கடலமுதே ! கரும்பே விரும்படியார்
எண்ணகத்தாய் ! உலகுக் குயிரானாய் !
எம்பெருமான் ! பள்ளி எழுந்தருளாயே ! (9)

---

## புவனியில் போய்ப் பிறவாமையில்

"அமுதமாய் நிற்கும் இறைவனே, உன்னைப் பெற்று உய்வதற்கான தவத்தலம் இந்த மண்ணுலகம். பூமியிற் பிறந்தோமே தவிர, பிறந்த பயனைப் பெற முதலில் நாங்கள் முயலவில்லை. வாழ்நாளை வீணாகக் கழித்தோம். நீ இதை எண்ணினாய். எங்களை ஆட்கொண்டு வாழ்விக்கக் கருதினாய். பொய்யாத கருணை வடிவான அம்பிகையோடு, இந்த உலகுக்கு வந்தாய். திருப்பெருந்துறையில் வந்து அமர்ந்தாய். ஆயினும் இவ்வளவு எளியனாக நீ இங்கே வந்தது மட்டும் போதாது. நாங்கள் உன் கருணையை உணர்ந்து உய்யும் அளவுக்கு எங்களைத் திருத்தி உன்னை நோக்கித் திருப்புவதும், உன் அருளே செய்யவேண்டி இருக்கிறது. பள்ளி நீங்கி எழுந்தருளி வா. வந்து எங்களை முழுவதும் ஆட்கொள்" என்று மாணிக்கவாசகர் இறைவனை வாழ்த்தும் இரு பாடல்களோடு 'திருப்பள்ளி எழுச்சி' நிறைவு பெறுகிறது.



புவனியிற் போய்ப்பிறவாமையின், நாள் நாம்
போக்குகின்றோம் அவமே; இந்தப் பூமி
சிவனுய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கி;
திருப்பெருந் துறையுறைவாய்! திருமாலாம்
அவன் விருப்பெய்தவும், அலரவன் ஆசைப்
படவும், நின்னலர்ந்த மெய்க் கருணையும் நீயும்
அவனியிற் புகுந்தெமை ஆட் கொள்ள வல்லாய்!
ஆரமுதே! பள்ளி எழுந்தருளாயே! (10)

திருச்சிற்றம்பலம்

---